

# தமிழ்ப் பெருமிதம்

**யாதும் ஊரே யாவரும் கேளிர்**

# முன்னுரை

அறங்கிடந்து பண்பாடும்
அன்பிருந்து சதிர் ஆடும்
திறங்கிடந்த நாகரிகம்
செய்து தந்தது தமிழ்நாடு!

– பாவேந்தர் பாரதிதாசன்

உலக நாகரிக வரலாற்றில் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே மேன்மையடைந்தது நம் தமிழ்ச் சமூகம். உழவுத் தொழிலில் உச்சம் அடைந்தோம். கடல் கடந்து பாரெல்லாம் பயணித்தோம். செல்வங்கள் பரிமாறி நாட்டின் வளம் பெருக்கினோம். குடிகளைப் பேணிக்காத்தோம். இப்படிக் கோலோச்சிய மாமனிதர்கள் வாழ்ந்த நிலம் நம் தமிழ் நிலம். தமிழர்களின் பெருமிதங்கள் நம் முன்னோர்களின் பேருழைப்பாலும் பொதுமை நலத்தாலும் விளைந்தவை. கலை, இலக்கியம், வரலாறு, பண்பாடு, அறிவியல், தொழில்நுட்பம், பொருளாதாரம் எனப் பல துறைகளிலும் உயரிடத்தை எட்டிப்பிடித்த பெருஞ்சமூகம் நம்முடையது. தமிழர்களின் வாழ்வைப் பார்த்துத் தன் வாழ்வையே மாற்றியவர் காந்தியடிகள். ஆன்மிகத்தை ஏற்றாலும் நாம் அறிவியலை எப்போதும் வரவேற்றுள்ளோம்.

தமிழர் என்று சொல்லிக்கொள்வதில் நமக்குப் பெருமிதம் உண்டு. ஆனால், எதற்காகப் பெருமைகொள்கிறாய் என்று ஓர் அந்நியர் கேட்டால் நாம் மடைதிறந்தாற்போல் கொட்டித்தீர்க்க வேண்டுமல்லவா? தமிழ் மொழியின் பெருமை நம் பண்பாட்டின் அருமை என நாம் சொல்லிக்கொள்ள நீண்ட நெடிய வரலாறு நமக்கு உண்டு. அவற்றையெல்லாம் வெறுமனே சொன்னால் மட்டும் போதாது. ஆதாரபூர்வமான தகவல்கள் வேண்டும். அப்போது எதிர்ப்பேச்சுக்கே இடமில்லை. இது தகவல்களின் காலம். தரவுகளின் காலம். தரவுகள் இல்லாத எந்தத் தகவலுக்கும் முக்கியத்துவம் இல்லாத காலம். வலுவான வரலாற்று ஆவணங்களைக் கொண்டிருக்கும் சமூகம் என்பதால் இந்தக் காலத்தை எதிர்கொள்வதற்கான மொழி நமக்கு உண்டு. எனவே மொழி, இலக்கணம், பண்பாடு, விளையாட்டு, அரசாட்சி, படை வலிமை, எழுத்தாற்றல் எனச் சங்க காலம் தொட்டு இன்றுவரையிலான மகத்துவங்களை டுவிட்டர் மொழியில் தந்திருக்கிறோம். நமது சாதனைகளையும் நமது பெருமைகளையும் நினைவூட்டும் வகையிலான சிறுசிறு தெறிப்புகள் இவை. நம்முடைய வரலாற்றையும் மரபையும் பண்பாட்டையும் எடுத்துச்சொல்லும் அழகிய கையேடு இது!

# சமத்துவம்...
# தமிழ் அறத்தின் அடிப்படை

பெண்கள் எல்லாத் தளங்களிலும் முன் நிற்கும் நிலமாகவே நம் தமிழ்நாடு இருந்திருக்கிறது. மிகச் சிறந்த சான்று அறிவுத் துறையில் ஔவையின் வீச்சு. உங்களுக்குத் தெரியுமா? ஔவை ஒருவர் இல்லை. சங்க காலம் தொட்டு வெவ்வேறு காலகட்டங்களில் ஔவை என்ற பெயரில் பெண் புலவர்கள் பலர் செயல்பட்டிருக்கிறார்கள். தமிழர்கள் தம்முடைய அடிப்படைக் கல்வியையே ஔவையின் ஆத்திசூடியிலிருந்து, 'அறம் செய விரும்பு' என்று தொடங்குவது, தமிழ்ச் சமூகம் அறத்தையே ஆதாரமாகக் கருதுகிறது என்பதைச் சுட்டுவதாகும். அது பாகுபாடு ஒழித்து, சமத்துவத்தை நிலைநாட்டல்! 'பாகுபாடுகளின் தாய்' என்று பாலினப் பாகுபாட்டைத்தான் உலகம் சுட்டுகிறது. தமிழ் அறம் அதைக் களையும் வகையிலேயே ஔவையிடமிருந்து பாடத்தைத் தொடங்குகிறது!



# கீழடி நம் தாய்மடி

வலுவான வரலாற்று ஆதாரங்களைக் கொண்டிருக்கும் சமூகத்தினர் நாம். இலக்கியங்கள் என்றால் சங்க காலத்திலிருந்து சான்றுகள் இருக்கின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பெரு நாகரிகத்துடன், கீழை மற்றும் மேலை நாடுகளுடன் வாணிபத் தொடர்பைத் தமிழர்கள் மேற்கொண்டிருந்தனர் என்று சிலப்பதிகாரம், பரிபாடல், மதுரைக்காஞ்சி போன்ற பண்டைய தமிழ் இலக்கியங்கள் பறைசாற்றிவந்தன. இதை உறுதிப்படுத்தும் விதத்தில், தொல்லியல் அகழாய்வுகளில் கரிம மாதிரிகள் கிடைத்துள்ளன. அவை அமெரிக்காவின் மியாமி நகரில் அமைந்துள்ள பீட்டா பகுப்பாய்வு ஆய்வகத்திற்கு அனுப்பப்பட்டு, காலக் கணக்கீடு செய்யப்பட்டுள்ளது. ஆதிச்சநல்லூரில் நடந்த அகழாய்வுவழி கிடைத்த முதுமக்கள் தாழி கி.மு.850 – கி.மு.610 காலகட்டத்தைக் கணிக்க உதவியது என்றால், கீழடியில் காணக்கிடைத்த எச்சங்கள் வைகைக் கரையில் சுட்ட செங்கற்களாலான கட்டடங்களுடன் கி.மு. 580–இல் ஒரு நகர நாகரிகம் இருந்ததைக் கணிக்க உதவின. கீழடியில் பானை ஓடுகளில் சுமார் 70–க்கும் மேற்பட்ட தமிழி/தமிழ்–









பிராமி எழுத்துகளும், சுமார் 600 ஓடுகளில் கிறுக்கல் கோடுகளும் கிடைத்தன; இவை 2500 ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் எழுத்தறிவு பெற்றிருந்ததைக் கணிக்க உதவின. சிவகளை அகழாய்வில் கிடைக்கப்பெற்ற நெல்மணிகளைக் கரிமப் பகுப்பாய்வுக்கு உட்படுத்தியபோது அதன் வயது 3,175 ஆண்டுகள் (கி.மு. 1,155) என்று உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. கொற்கை அகழாய்வில் கிடைக்கப்பெற்ற மேற்கத்திய நாட்டுப் பானை ஓடுகளும், வெள்ளி முத்திரைக் காசுகளும் பண்டைக் காலத்திலேயே பன்னாட்டு வணிகம் நடைபெற்றதற்கான சான்றுகள். மயிலாடும்பாறையில் நடந்த அகழாய்வில் கிடைக்கப்பெற்ற இரும்புக் கருவிகள் கி.மு 2172–கி.மு 1615–க்கு இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தவை என ஆய்வு மூலம் தெரியவருகிறது. தொடரும் ஆய்வுகள் நம்முடைய தொன்மையை மட்டும் அல்லாது வரலாற்று மேன்மையையும் வெளிப்படுத்துகின்றன!



# திரைகடல் ஓடி திரவியம் தேடு



தமிழர்கள் கப்பல், கட்டுமரம், நாவாய், தோணி, வத்தை, வள்ளம், மிதவை, ஓடம், தெப்பம், டிங்கி, பட்டுவா, வங்கம், அம்பி, திமில், புணை, கலம், மரக்கலம், தோணி, படகு, கைப்பந்தல், வஞ்சி, நீள்மரம் என்னும் கலங்களைப் பயன்படுத்திக் கடற்பயணம் மூலம் வணிகம் செய்துள்ளனர். கொற்கை, முசிறி, காவிரிப்பூம்பட்டினம், குமரி, எயிற்பட்டினம், கொல்லத்துறை, அரிக்கமேடு, மருங்கவூர்ப்பட்டினம், மங்களூர், நறவு, வைக்கரை போன்ற துறைமுகங்கள் சங்க

காலத்தில் சிறப்புற இயங்கியுள்ளன. இந்தத் துறைமுகங்களிலிருந்து இலங்கை, பர்மா, கடாரம் (மலேசியா), சாவகநாடு (கிழக்கிந்தியத் தீவுகள்), அரபு நாடுகள், எகிப்து, யவன தேசம் (ரோம், கிரேக்கம்) போன்ற பல நாடுகளுடன் வணிகம் செய்தனர். யவனர்களுடனான வணிகத் தொடர்பை 'பெரிப்ளூசின் செங்கடல் செலவு' நூலில் அறியலாம். சேர நாட்டின் முக்கியத் துறைமுகங்களில் ஒன்றான முசிறியில் யவனர்கள் பொன்னைத் தந்து மிளகு முதலான பொருள்களை வாங்கிச் சென்றதற்கான குறிப்பை, 'பொன்னொடு வந்து கறியொடு பெயரும் வளங்கெழு முசிறி' என்ற அகநானூற்றுப் பாடல் வழி அறியலாம். காவிரிப்பூம்பட்டினத்தின் வணிகவளம் குறித்துப் பட்டினப்பாலை பேசுகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே நம் முன்னோர்கள் நேர்த்தியான கட்டமைப்புடன் வணிகம் செய்துவந்தது நமக்குப் பெருமையன்றோ!

# ஆழி ஆண்ட அரசர்கள்



பண்டைய தமிழ் அரசுகள் 2000 ஆண்டுகளுக்கு முன்னரே மாபெரும் கடல் வல்லரசுகளாகவும் இருந்துள்ளன. வலிமைமிக்க கடற்படைகள் கொண்டு தங்கள் கடல் வணிகத்தையும் நாட்டையும் பாதுகாக்க கடல்பரப்பில் ஆதிக்கம் செலுத்தினர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், சேரன் செங்குட்டுவன் தமது கடற்படை மூலம் கடம்பக் கொள்ளையர்களை அழித்தனர் எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. சேர மன்னர்கள் கடற்போரில் வல்லவர்களாகத் திகழ்ந்ததற்குச் சான்றாக பரணர், பதிற்றுப்பத்துப் பாடலொன்றில் சேரன்



செங்குட்டுவனை, 'கடல் பிறக்கோட்டியகுட்டுவன்' என்கிறார். பெரிய கடற்படையுடைய சேரன் செங்குட்டுவன் கொங்கர்களோடு புரிந்த கடற்போரில் வெற்றி பெற்றது, அகநானூற்றுப் பாடலொன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. சோழ மன்னன் கரிகால் சோழன் தனது பெருங்கடற்படை கொண்டு இலங்கை மீது தாக்குதல் நடத்தி அங்கு தனது புலிக்கொடியை நாட்டினான் என்ற செய்தி 'மகாவம்சம்' நூலில் இடம்பெற்றுள்ளது. சீனாவிற்கும் இந்தியாவிற்கும் இடையில் செல்லும் கப்பல்கள் கடாரம் துறைமுகம் வழியாகவே சென்றுவந்தன. 11–ஆம் நூற்றாண்டில் இப்பகுதியில் சீன வணிகர்களின் அச்சுறுத்தல்கள் மிகுந்தன. தமிழ் வணிகர்களுக்கும் இப்பகுதியில் வாழ்ந்த தமிழர்களுக்கும் இதனால் பல இன்னல்கள் நிகழ்ந்தன. எனவே, மாமன்னன் ராஜேந்திரன் பெரும் கப்பற்படையுடன் சென்று கடாரம் வென்றான். இலங்கையில் சோழர் ஆட்சியை நிலைநாட்டியதுடன் தென்கிழக்கு ஆசிய நாடுகளிலிருந்து சீன எல்லை வரை அலைகடல் நடுவே பலகலஞ்செலுத்தி சோழப் பேரரசின் ஆதிக்கத்தை நிலைநாட்டிய பெருமை ராஜேந்திர சோழனைச் சாரும்!



# ஏறுதழுவுதல்



பன்னெடுங்காலமாக வேட்டைச் சமூகமாக இருந்த மனிதகுலம், படிப்படியாகப் பரிணாம வளர்ச்சிபெற்றுக் கால்நடைச் சமூகமாக உருவானது. அதில் தமிழ்ச் சமூகமும் ஒன்று. ஏறு தழுவுதல், மஞ்சு விரட்டு, எருது கட்டு, வடமாடு விடுதல், பொல்லெருது பிடித்தல், ஜல்லிக்கட்டு எனப் பல்வேறு பெயர்களில் நம் நிலத்தில் வீர விளையாட்டுகள் விளையாடப்பட்டு வருகின்றன. இதற்கான சான்றுகள் பாறை ஓவியங்களிலும், சங்க இலக்கியங்களிலும், நடுகல் சிற்பங்களிலும் காணப்படுகின்றன. கரிக்கையூர்,





கல்லூத்து – அணைப்பட்டி போன்ற இடங்களில் உள்ள பாறை ஓவியங்களில் திமில் உள்ள காளையை அடக்க முயலும் காட்சிகள் தீட்டப்பட்டுள்ளன. சிந்துவெளி நாகரிகத்திலும், திமில் உள்ள காளைகளை வீரர்கள் அடக்குவது போன்ற முத்திரைகள் காணப்படுகின்றன. தமிழர்களின் பண்டைய இலக்கியங்களான கலித்தொகை, மலைபடுகடாம், பட்டினப்பாலை, சிலப்பதிகாரம், புறப்பொருள் வெண்பாமாலை ஆகியவற்றிலும் பள்ளு இலக்கியங்களிலும் இது குறித்த பல்வேறு பதிவுகள் உள்ளன. 'கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும் புல்லாளே ஆய மகள்' என ஏறு தழுவலைச் சிறப்பித்துக் கூறுகிறது கலித்தொகை. தமிழர்களின் பண்பாட்டுத் திருவிழாவான இந்த விளையாட்டு, வேளாண்மையை மையமாகக் கொண்டு பொங்கல் திருநாளை ஒட்டி விளையாடப்படுகிறது. இது மதம் சார்ந்த விளையாட்டன்று; தமிழர் மண் சார்ந்த வீர விளையாட்டு. நம் முன்னோர்கள் உருவாக்கிய இம்மரபு சார்ந்த விளையாட்டைப் பாதுகாப்பது நம் கடமையாகும்!

# தன்னேரிலாத தமிழ்நாடு



தமிழராகிய நாம் நம்முடைய சிந்தையில் கொள்ள வேண்டிய தலையாய கருத்து, நாம் யாருக்கும் சளைத்தவர் இல்லை. உலக அளவிலும் இந்திய அளவிலும் நாம் எங்கே இருக்கிறோம் என்ற தெளிவு நமக்கு இருக்குமானால், நம்முடைய உண்மையான வலு நமக்குப் புரிபட்டுவிடும். 2022–ஆம் ஆண்டு கணக்கீட்டின்படி, தமிழ்நாட்டின் மக்கள்தொகை 7.26 கோடி; தமிழ் நிலத்தின் பரப்பளவு 1.30 லட்சம் சதுர கி.மீ. இந்திய மாநிலங்களில் மக்கள்தொகையில் நாம் ஆறாவது இடத்திலும், பரப்பளவில் பத்தாவது இடத்திலும் இருக்கிறோம். சர்வதேச அளவில் ஒப்பிட்டால், மக்கள்தொகையில் கிட்டத்தட்ட பிரான்ஸுக்கும், பரப்பளவில் கிரேக்கத்துக்கும் இணையானது நம் தமிழ்நாடு. மக்கள்தொகை, பரப்பளவில் மட்டும் இல்லை; அறிவுத் துறை, கலை, அறிவியல், தகவல் தொழில்நுட்பம், விளையாட்டு என்று பல துறைகளிலும் தனித்த ஓர் இடத்தில் இருக்கிறது நம்முடைய தமிழ்நாடு!

# தமிழ் எம் உயிருக்கு நேர்

# ழ ழ ழ

நம் பெருமைகளிலேயே முதன்மையானது, நம்மைப் பிணைக்கும் உயிர் சக்தியானது தமிழ். உலகின் தொன்மையான மொழிகளில் ஒன்று நம் தமிழ். உலகின் தலைசிறந்த பண்பாடுகளில் ஒன்றின் மூலவேர் நம் மொழி. செம்மொழி என்று தமிழ் பெற்றிருக்கும் தகுதியானது குறைந்தது அதன் ஈராயிரம் ஆண்டு இலக்கியச் செழுமைக்கான மரியாதை. 2011 மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி, இந்தியாவில் 19,500 மொழிகளும் பேச்சுவழக்குகளும் உள்ளன. இவற்றில் குறைந்தது 10,000-க்கும் அதிகமானவர்களால் பேசப்படும் மொழிகள் 121. இவற்றில் இந்திய அரசால் அட்டவணைப்படுத்தப்பட்ட மொழிகள் 22. அவற்றில் அதிகமான மக்களால் பேசப்படும் மொழிகளில் ஐந்தாவது இடத்தில் இருப்பது நம் தமிழ். மொழி ஒரு தொடர்புக் கருவி, மொழி ஓர் அடையாளம் என்பதைத் தாண்டி, மொழி ஒரு சமூகத்தின் அதிகாரத்துக்கும் பொருளாதாரத்துக்கும் முக்கியமான அறிவு மூலதனம் என்று உலகம் பேசும் காலம் இது. எனில், தமிழர்களாகிய நாம் பெரும் மூலதனத்துக்குச் சொந்தக்காரர்கள்!

# தமிழர் பெருமிதம்... சங்க இலக்கியம்!

தமிழ்ப் பெருமிதத்தின் ஆகச் சிறந்த அடையாளம் சங்க இலக்கியம். உலகின் மிகத் தொன்மையான இலக்கியங்களுள் சங்க இலக்கியமும் அடங்கும். நம் தமிழ்ச் சமூகத்தின் முதன்மையான இலக்கியப் பதிவாக மட்டுமல்ல; நமது தொல் வரலாற்றின் தடங்களை அறிந்துகொள்வதற்கான வரலாற்றுப் பதிவுகளாகவும் சங்கப் பாடல்களைக் கொள்ள முடியும். நம்முடைய முன்னோர் கொண்டிருந்த உலகளாவிய வாணிபத் தொடர்பும் பண்பாட்டுத் தொடர்பும் கடையெழு வள்ளல்களின் கொடைத்திறனும் சங்க இலக்கியத்தில் பதிவாகியிருக்கின்றன.



அகம் – புறம் என்று வாழ்க்கையை இரண்டாகப் பிரித்ததோடு மட்டுமல்லாமல் இயற்கை அடிப்படையில் இலக்கியத்தையும் வாழ்க்கையையும் பார்த்தவை சங்க இலக்கியங்கள். புவிவெப்பமாதல் சூழலில் உலகமே இயற்கையைக் காப்பது குறித்துக் கவலை கொண்டிருக்கிறது. இந்நிலையில் இயற்கை அடிப்படையிலான திணைக் கோட்பாடு என்பதை உலகுக்குச் சங்க இலக்கியத்தின் பெரும் பங்களிப்பாகக் கருத முடியும்!

# வாழும் வள்ளுவம்



ஒரு சமூகத்தின் பெருமித அடையாளங்களுள் ஓர் எழுத்தாளுமை இந்த அளவுக்குப் பங்கு வகிக்கும் வேறெந்தச் சமூகத்தையும் நாம் சொல்லிவிட முடியாது. திருவள்ளுவர் தமிழ் இனத்தின் தலையாய அடையாளம். அரசியல், அறம், கல்வி, வணிகம், காதல் என்று வாழ்வின் அனைத்துத் தளங்களுக்கும் தமிழர்களுக்கான வழிகாட்டி நூலாகத் திருக்குறளைத் தந்துவிட்டுச் சென்றிருக்கிறார். இரு வரிகளில், வெறும் ஏழே சீர்களில் செறிவான செய்திகளைக் கவித்துவத்தோடு வள்ளுவர் சொன்னதை வியக்காதவர்களே இல்லை. உண்மையின் பல்வேறு வடிவங்களையும் அணுகும் திருக்குறள் திரும்பத் திரும்பப் பன்மைத்துவத்தைப் பேசுவது அதன் மிகுந்த சிறப்பாகும். வேற்றுமைகளால் பிளவுண்டு கிடக்கும் உலகத்துக்கு, 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற சமத்துவ மந்திரத்தைக் காலத்தால் முந்தித் தந்த தமிழின் தலைமகனாக திருவள்ளுவர் ஆனார். வாழ்வில் பொருள், இன்பம் ஆகிய இரண்டுக்கும் அறமே அடிப்படை என்பதை கன்னியாகுமரியில் 38 அடி பீடத்தின் மேல் 95 அடியில் உயர்ந்துநிற்கும் (மொத்தம் 133 அடி – குறள் அதிகார எண்ணிக்கையின் குறியீடு) அவரது சிலை உணர்த்துகிறது. தமிழ்கூறும் நல்லுலகு இருக்கும் வரை அவரது சொற்கள் நமக்கு வழிகாட்டும்!

# விடுதலைப் போரில் வீரத் தமிழகம்

விடுதலை வேட்கை கொண்ட தமிழர்கள் அடக்குமுறையை எதிர்த்துப் போராடியதற்கான சான்றுகளை விடுதலைப் போர் வரலாறு நெடுகிலும் காண முடிகிறது. தென் தமிழ்நாட்டின் பாளையக்காரரான பூலித்தேவன்தான் முதல் புரட்சி விதையைத் தூவினான்; 1750–இல் ஆங்கிலேயருக்கு வரிகட்ட மறுத்துத் திமிர்ந்து எழுந்தான்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து கட்டபொம்மன், மருது சகோதரர்கள், வேலுநாச்சியார் எனப் பலர் வெகுண்டெழுந்தனர். அந்தப் புரட்சிக் கனல் நாடெங்கும் பரவியது. அடிமை விலங்கொடிக்க ஆதிக்கம் எதிர்த்த வரலாற்றுக்குச் சொந்தக்காரர்கள் பலர் என்றபோதும் உரிமைக் குரலை முதலில் எழுப்பியவர்கள் தமிழர்கள். இந்தியாவின் முதல் சுதந்திரப் போராட்டம் என 1857–இல் நடைபெற்ற சிப்பாய்க் கலகம் குறிப்பிடப்படுகிறது. ஆனால், அதற்கு 50 ஆண்டுகளுக்கு முன்னரே ஆங்கிலேயருக்கு எதிராக 1806–இல் வேலூர்க் கோட்டையில் முதல் கலகம் நடந்தது.

இந்திய தேசியத் தலைவர்களுக்கு எந்த வகையிலும் குறைந்திடாதபடி 1906–இல் சுதேசி நாவாய்ச் சங்கம் நிறுவி சுதேசி கப்பல்களைக் கடலில் செலுத்திப் பழந்தமிழ்ப் பரம்பரையில் வந்த வீரர் என்பதை நிரூபித்தார் கப்பலோட்டிய தமிழர் வ.உ.சிதம்பரனார். திருப்பூர் குமரன், சுப்ரமணிய சிவா, பாரதியார், நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம், தியாகி எஸ்.எஸ்.விஸ்வநாத தாஸ், பசும்பொன் முத்துராமலிங்கம், டி.கே.பட்டம்மாள் எனப் பல தமிழர்கள் விடுதலைக் கனலை நெஞ்சில் சுமந்து நாட்டு விடுதலைப் போரின் களத்தில் வெவ்வேறு தளத்தில் முன்னணியில் நின்றனர்.

இந்திய தேசிய ராணுவத்தை நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் உருவாக்கியபோது, அதில் சேர்ந்து போராடிய தமிழர் அநேகர். இப்படி இந்திய விடுதலைப் போரில் பெண்கள் மற்றும் அறியப்படாத போராளிகள் எனப் பலர் இன்னுயிர் ஈந்து நம் நாடு காத்தனர்.



# நல்லிணக்கம்
# அது நம் அடிப்படைக் குணம்





தமிழ்நாட்டில் அறநிலையத் துறையின்கீழ் மட்டும் 46,000-க்கும் மேற்பட்ட கோயில்கள் உள்ளன. இந்தியாவிலேயே அதிகமான கோயில்கள் உள்ள மாநிலமும் நம்முடையது. பல்வேறு உணவகங்களின் பணம் செலுத்துமிடத்தில் திருநீறு, குங்குமம், சந்தனம் வைத்திருப்பதைக் காண முடியும். இந்த அளவுக்கு ஆன்மிகத்தோடு பிணைந்த நிலம்தான் சமூக நல்லிணக்கப் பூங்காவாகவும் திகழ்கிறது. கோயில்களையும் வழிபாட்டையும் மக்கள்மயம் ஆக்கிய 'பக்தி இயக்க' ஆணிவேர்கள் தமிழ்நாட்டில்தான் உள்ளன. 63 நாயன்மார்களும், 12 ஆழ்வார்களும் கோயில்களையும் வழிபாட்டையும் தங்களால் இயன்றவரை ஜனநாயகப்படுத்தினர். தமிழ்நாட்டில் பிறந்த இராமானுஜர் மிகப் பெரும் சமூக சீர்திருத்தர். ஏற்கெனவே தனக்கென்று ஒரு சித்தர் மரபையும் நாட்டார் வழக்கையும் குலதெய்வங்களையும் கொண்டிருந்த சமூகம் இது. ஆகையால், எல்லாவற்றையும் அரவணைத்துக்கொண்டது. தஞ்சாவூர் புன்னைநல்லூர் மாரியம்மன் கோயிலுக்குச் சென்றுவிட்டு, அங்கிருந்து வேளாங்கண்ணி மாதா கோயிலுக்குப் போய்விட்டு, அப்படியே நாகூர் ஆண்டவர் தர்காவுக்கும் போய்விட்டு வீடு திரும்புவது தமிழ் மக்களின் நல்லிணக்கத்துக்கான ஒரு குறியீடு. தமிழ்நாட்டின் வளர்ச்சிக்கும் தமிழர்களின் முன்னேற்றத்துக்கும் சாதி – மத வன்முறைகள் அரிதான மாநிலம் இது என்று உலக முதலீட்டாளர்கள் கருதுவதும் முக்கியமான காரணம்!

# மக்களாட்சி அது நம் மரபு

நேர்தல்முறை

"முப்பது குடும்பிலும் குடவோலைக்குப் பெயர் நீட்டி,
இப்பன்னிரண்டு சேரியிலுமாக இக்குடும்பு வெவ்வேறாய் ஓலைபூட்டி
முப்பதுகுடும்பும் வெவ்வேறே கட்டி குடம்புக இடுவதாகவும் குடவோலை
பறிக்கும் போது மஹாஸபைத் திருவடியாரை ஆபாலவிருத்தம் நிரம்ப
உட்புகக்கொண்டு அன்று உள்ளூரிலிருந்த நம்பிமார் ஒருவரையும்
ஒழியாமே உளமண்டகத்திலே இருத்திக்கொண்டு...... அனந்தரம்
ஒருபாலனைக் கொண்டு ஒரு குடும்பு வாங்கி மற்றொரு குடத்துக்கே
புகவிட்டு, இக்குடத்தில் ஓர் ஓலை வாங்கி மத்தியஸ்தன் கையிலே
கொடுப்பதாகவும் அக்குடத்து ஓலை மத்தியஸ்தன் வாங்கும் போது
ஐந்து விரலும் அகல வைத்து உள்ளங்கையில் ஏற்றுக் கொள்
வானாகவும்........ வாசித்த அப்பேர் நீட்டுவதாகவும்
இப்பரிசே முப்பது குடும்பிலும் ஒரோபேர் கொள்வதாகவும்
வியவஸ்தை செய்தோம். உத்திரமேரூர் சதுர்வேதி
மங்கலத்து சபையோம்...............
எழுதினேன் மத்தியஸ்தன் காட்டிப் போத்தன்
சிவக்குறி இராஜமல்ல மங்கலப் பிரியனேன்"

உலகெங்கும் மக்களாட்சி மலர்வதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே தமிழ்நாட்டில் சோழர்களின் ஆட்சியில் மக்களாட்சிக்காக இடப்பட்ட வித்துகளில் ஒன்றுதான் குடவோலை முறை. கிராம நிர்வாகத்தை நடத்துவதற்கும், உள்ளூரின் குரலை நாட்டை ஆளும் அரசுக்குப் பிரதிபலிப்பதற்கும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கக் கையாளப்பட்ட முறை. அகநானூற்றில் மருதன் இளநாகனார் எனும் புலவர் பாடிய பாடலிலேயே குடவோலை முறை தொடர்பான குறிப்பு காணப்படுகிறது. பிற்காலத்தில் கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததும், முதலாம் பராந்தக சோழன் ஆட்சிக் காலத்தைச் சேர்ந்ததுமான உத்திரமேரூர் கல்வெட்டுகளிலும் இதுபற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. முழுமையான மக்களாட்சியை மன்னராட்சிக் காலம் பிரதிபலிக்கவில்லை என்றாலும், மக்களாட்சி நோக்கி எடுத்துவைக்கப்பட்ட முதல் அடிகளுள் ஒன்று குடவோலை முறை. நம்முடைய தமிழ்ச் சமூகம் எப்போதும் பேசும் மக்களாட்சி உரிமைக்கு நீண்ட மரபு இருக்கிறது என்பதையும் இதன் வழி உணரலாம்.

# ஒன்றே குலம் ஒருவனே தேவன்



சமூகத்தில் புரட்சிகரமான கருத்துகளை வெளிப்படுத்தியவர்கள் சித்தர்கள். உள்ளமே கோயில் என்று உரக்கச் சொன்னார்கள். சாதி, சடங்கு, சாத்திரங்கள் போன்றவற்றை எதிர்த்தார்கள். சித்தர் தம் சிறப்பைக் கூற திருமூலர் கூறிய 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற ஒற்றைக் கூற்று போதும். புற உலகிலும் நமது மானிட உடலிலும் பொதிந்திருக்கும் தத்துவம் ஒன்றுதான் என்பதை உணர்ந்து உணர்த்தியவர்கள் சித்தர்களே. சித்தர் பாடல்களில் வாழ்வியல் கருத்துகளும் அறிவியல் கருத்துகளும் நிறைந்திருக்கின்றன. பிறப்பால் உயர்வுதாழ்வில்லை, அவரவர் சிறப்பால்தான் உயர்வு என்று கூறுகிறது கபிலர் அகவல். சிவவாக்கியர், பாம்பாட்டிச் சித்தர், பத்திரகிரியார், கபிலர் என எண்ணற்ற சித்தர்கள் வாழ்ந்தனர். சித்தர்கள் பாடல்களில் எழுதிவைத்த மருத்துவக் குறிப்புகள் சித்த மருத்துவம் எனத் தனி அடையாளம் பெற்றன. ஒரு சித்தரைப் போல் இன்னொரு சித்தர் இருப்பதில்லை என்பதே சித்தர்களின் சிறப்பு. சித்தர்கள் முதல், 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடிய' வள்ளலார் வரை தமிழ்கூறும் நல்லுலகம் எத்தனையோ மாமனிதர்களைக் கண்டுள்ளது.



# பசிப்பிணி போக்கிய பண்பாளர்



திருவருட்பிரகாச வள்ளலார் வடலூரில் தருமச்சாலை அமைத்து மனிதநேயத்துடன் மனிதரின் பசிப்பிணியைப் போக்கிய பண்பாளர். பசி தீர்ந்த மானிடரிடம் அறவுரை பகன்றார். அறவுரைக்கெனவே சமரச வேத பாடசாலையை நிறுவினார். அறவுரை கேட்ட மானிடர் அருட்பெருஞ்சோதியான ஆண்டவனை ஒன்றியிருந்து கண்டுமகிழ்வதற்காக சத்திய ஞான சபையையும் அமைத்தார். அருள் வடிவாக ஒளிரும் ஆண்டவனைத் தனிப்பெருங்கருணை நெறிவழியே அடைய முடியும் என்று அறவுரை கூறினார். 'அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை' என்ற மந்திரத்தை அருளினார். மனிதநேயரான வள்ளலார் தனித்துவம் கொண்ட அருளாளர். இறைவன்பால் முறையிடும் நிறைமொழியாளராகிய இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பா, கருத்தைக் கவரும் கனியமுது. பத்தொன்பதாம் நூற்றாண்டு கண்ட பண்பாளரான வள்ளலாருடைய சமய சமரசக் கொள்கையும், ஒளிவழிபாடும், சாதி சமய வேறுபாட்டை விட வேண்டும் என்ற கருத்தும் இன்றைய சமூகத்தைச் சீர்படுத்தும் அறநெறிகள். வள்ளலாரின் ஜீவகாருண்யம் அனைத்து ஜீவன்களையும் தம் உயிர்போல் பாவித்து நேசிக்கச் சொல்லும் உயர்ந்ததொரு அறநெறி.

# கோயில்களும் அரண்மனைகளும் கற்காப்பியங்கள்



தமிழ்நாட்டில் திராவிடக் கட்டடக் கலை அடிப்படையில் உருவாக்கப்பட்ட கோயில்களும் அரண்மனைகளும் சுற்றுமதிலையும், உயர்ந்து அகன்ற வாயில்களையும், வாயில்கள் மீது உயர்ந்த மாடங்களையும் கொண்டிருந்தன. கோயிலை நடுநாயகமாக வைத்தே தெருக்கள் அமைக்கப்பட்டன. அதை இன்றும் மதுரையில் காணலாம். நாயக்கர் கால மதுரை மீனாட்சியம்மன் கோயிலும் ஆயிரங்கால் மண்டபமும் கண்களுக்கு விருந்து படைப்பவை. மாமல்லபுரத்துக் குடவரைக் கோயில்களும் கற்றளிகளும் சிற்பங்களும் ஓவியங்களும் தமிழர்களின் கலைப் பெருமிதங்கள். புதுக்கோட்டை, சித்தன்னவாசலில் தீட்டப்பட்ட சுவரோவியங்களைத் தீட்டியவர்கள் எப்பேர்ப்பட்ட ஓவியர்களாக இருந்தால் இத்தனை நூற்றாண்டுகளைக் கடந்தும் அவை தாக்குபிடிக்கும்? தாராசுரம் ஐராதீஸ்வரர் கோயில் தூண்களில் சிற்பங்களைச் செதுக்கிய சிற்பிகள் எப்பேர்ப்பட்டவர்களாக இருந்தால் விரல் அளவு வரை நுட்பமான சிற்பங்களை வடிவமைத்திருப்பார்கள்? எல்லாமே கூர்பார்வைதான். ஆயிரம் ஆண்டுகளைக் கடந்துவிட்ட தஞ்சைப் பெருவுடையார் கோயிலை வெறும் ஏழே ஆண்டுகளில் ராஜராஜன் கட்டிமுடித்தான் என்பதை நம்ப முடிகிறதா? ஆனால், திட்டமிட எடுத்துக்கொண்ட காலம் கட்டிமுடிக்க எடுத்துக்கொண்ட காலத்தைவிட அதிகம். இது தேர்ந்த திட்டமிடலுக்குப் பேர்போனவர்கள் தமிழர்கள் என்பதற்கான சான்று!



# முத்தும் மிளகும் கொழித்த வரலாறு



பன்னெடுங்காலமாகவே அயல்நாட்டினர் தம்மை ஈர்த்த தமிழ்நாடு பற்றிப் பல குறிப்புகளை எழுதிவைத்துள்ளார்கள். அவை நமது பண்பாட்டுக்குச் சான்றுகளாய் உள்ளன. தாலமி காலத்தில் இந்திய வேட்டை நாய்களும் இந்தியப் பசு மாடுகளும் எகிப்தில் காணப்பட்டுள்ளன. பறக்கைத் துறைமுகத்தில் நடைபெற்ற நமது மிளகு வணிகம் குறித்து எழுதியுள்ளார் பிளினி. கி.பி. 640-இல் தமிழ்நாட்டின் காஞ்சிபுரத்துக்கு வந்த சீனப் பயணி யுவான் சுவாங் அங்கிருந்த பௌத்தப் பல்கலைக்கழகத்தில் உரையாற்றியுள்ளார். மார்க்கோபோலோ கிபி 1293-இல் தமிழ்நாடு வந்துள்ளார். அவர் தமிழ் மன்னர்களைப் பற்றியும், இங்கு நடைபெற்ற முத்துக்குளிப்பு குறித்தும், மக்களின் உணவு, உடை, அன்றாடப் பழக்கவழக்கங்கள் குறித்தும் விரிவாகப் பதிவுசெய்திருக்கிறார். சமகாலப் பொருளியல் அறிஞர் அமர்த்தியா சென்னும் தமிழ் மண்ணின் புகழ்பாடுகிறார். "மனிதத் திறன்களைப் பயன்படுத்தாமல் விரைவான பொருளாதார வளர்ச்சியை எட்ட முயன்ற பெரும்பாலான இந்திய மாநிலங்களைவிட, மனிதத் திறன்களைப் பயன்படுத்திய தமிழ்நாட்டில் வருமானம் அதிகம். வறுமையும் பிற மாநிலங்களை ஒப்பிட தமிழ்நாட்டில் குறைவு. சமூகநலத் திட்டங்களிலும் தமிழ்நாடு முன்னணி வகிக்கிறது" என்கிறார் சென். இந்தியாவும் உலகமும் போற்றும் மண் நம் தமிழ் மண்!







# நீர் மேலாண்மையில் நிபுணத்துவம்



தமிழ்நாடு அடிப்படையில் வெப்பமண்டலப் பகுதி என்பதால் நீர் குறித்த நம்பிக்கைகளுக்கும் வெளிப்பாடுகளுக்கும் நீர் மேலாண்மைக்கும் பேர்போனது. குளிர்ச்சியுடையது என்பதால் நீரை 'தண்ணீர்' என்று தமிழர்கள் வழங்கினர். நீரால் உடலைத் தூய்மை செய்வதால் 'குளிர்த்தல்' என்று



குறித்தனர். வானத்திலிருந்து நீர் வருவதால் அதை 'அமிழ்தம்' என்றார் வள்ளுவர். நிலத்துக்கும் நீருக்குமான உறவு பிரிக்க முடியாதது. கிணற்று நீர் உவராக இருந்தால் அதனுள் நெல்லி வேர் போட்டுவைக்கும் வழக்கம் பழந்தமிழரிடையே இருந்தது. சுனை, கயம், பொய்கை, ஊற்று, குட்டை, குளம், ஊருணி, ஏரி, ஏந்தல், கண்மாய் என விதவிதமாக அழைத்தது நீர் மேலாண்மைக்குச் சான்றுகளாகும். மற்றோர் எடுத்துக்காட்டு, மழைக் காலங்களில் ஏரி நிரம்பும்போது நீந்துவதில் வல்லவரான ஒருவர் தண்ணீருக்குள் சென்று கழிமுகம் அடைந்து குமிழித்தூம்பை மேலே தூக்குவார். அடியில் இரண்டு துளைகள் காணப்படும். மேலே இருக்கும் நீரோடித் துளையிலிருந்து நீர் வெளியேறும். கீழே இருக்கும் சேறோடித் துளையிலிருந்து நீர் சுழன்று சேற்றுடன் வெளியேறும். இதனால், தூர் வார வேண்டிய அவசியம் இல்லை. முக்கியமாக, தமிழர் நீர் மேலாண்மையின் அடையாளங்களில் ஒன்று கல்லணை. சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பே,நீரைத் தேக்கி முறையான நீர்ப்பாசனம் மூலம் வேளாண்மை செய்து பொருளாதாரம் பேணிய பேரினம் தமிழினம் எனச் சான்று பகர்கிறது கல்லணை!



# தொல் தமிழிசையின் பெருமை



தமிழிசை மிகத் தொன்மையானது. சங்க காலத்துக்கு முன்பே தமிழிசை தோன்றி வளர்ந்துள்ளது. தொல்காப்பியத்திலேயே இசை தொடர்பான செய்திகள் உள்ளன. தமிழ் நிலங்களில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நிலங்களுக்குத் தனித்தனிப் பண்கள் உள்ளன. முல்லை நிலத்துக்குரிய பண் செம்பாலை, இதுதான் அரிகாம்போதி எனப்படுகிறது. இந்திய நாட்டின் ஆதிமுதற்பண் இந்தச் செம்பாலைதான். தொல்காப்பிய காலத்துக்குப் பல நூற்றாண்டுக்கு முன்னரே முல்லைப்பண் தோன்றியுள்ளது. இதைப் போல் குறிஞ்சிக்குப் படுமலைப்பாலை, மருதத்துக்குக் கோடிப்பாலை, நெய்தலுக்கு விளரிப்பாலை என்னும் பண்கள் உள்ளன. சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, பக்தி இலக்கியங்கள் எனப் பல நூல்கள் தமிழிசையின் சிறப்பைச் சித்தரித்துள்ளன. நமது இசைக்கருவியான யாழ் தொல்காப்பியரின் காலத்துக்குப் பல நூற்றாண்டுக்கு முன்னரே உருவாக்கப்பட்டு, பண் வகைகள் இசைக்கப்பட்டுள்ளன என்பது தமிழிசையின் பெருமைக்குச் சான்று!

# செம்மொழியான தமிழ் மொழி



ஈராயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய தொல்காப்பியத்தில் 'என்ப', 'என்மனார்', 'என்றிசினோர்' போன்ற சொல் வழக்குகள் உள்ளதால் அதற்கும் முன்பே இலக்கண நூல்கள் இருந்திருக்க வேண்டும். எள்ளிலிருந்து எண்ணெய் விடுபடுவதுபோல இலக்கியத்திலிருந்து இலக்கணம் தோன்றும். எனவே, அதற்கும் முன்பே இலக்கியங்கள் படைக்கப்பட்டிருக்க வேண்டும். விதையிலிருந்து சிறிது சிறிதாக முளை தோன்றி வளர்வதைப் போன்று பேச்சு மொழியிலிருந்து இலக்கணம் தோன்றும். எனவே, அதற்கும் முந்தைய தொன்மை வாய்ந்தது தமிழ் என்று உணரலாம். ஒலியிலிருந்து பேச்சும் சொற்களும் உருவாகத் தொடங்கின. மனிதர்கள் மற்றொருவருடன் தகவல்களைப் பரிமாறுவதற்கு முதலில் சைகை மொழியையும், பின்பு ஒலிகளையும் பயன்படுத்தினார்கள். இதன் மூலம் உலகில் தோன்றிய ஆதிக்குடிகளில் தமிழ்க்குடியும் ஒன்று என்பது தெளிவாகிறது. 'பஃறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்துக் குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள' என சிலப்பதிகாரம் கூறுகிறது. தொல்காப்பியப் பாயிரம் 'நிலந்தரு திருவின் பாண்டியன்' என்று கூறுவதன் மூலமும் தொன்மையை அறிய முடிகிறது. இங்கு பேசப்பட்ட தமிழே ஆப்பிரிக்க, ஆசிய மொழிகளில் கலந்துள்ளது என்று ஒப்பிலக்கண மொழியியலாளர் சான்றுகளுடன் குறிப்பிடுகின்றனர். செம்மொழித் தகுதிகள் பெற்ற உலக மொழிகளில் இன்றளவும் இளமையுடனும் நெகிழ்வுத் தன்மையுடனும் இருக்கும் மொழிகளில் ஒன்று நம் தமிழ். மூத்த மொழி எனினும் மூப்பிலா மொழி!

# தொல்காப்பியம்

## எழுத்து – சொல் – பொருள்

தமிழ் இலக்கியம்போல் தமிழ் இலக்கணமும் பழமையானது. செவ்விலக்கியங்களை உடையதாக இருந்தாலும் தமிழ் மொழியின் இலக்கண அமைப்பு பெரும்பாலும் இன்றைய பேச்சுமொழியோடு ஒத்திசைவதாகவே அமைந்துள்ளது. வழக்கு, செய்யுள் என்ற இரண்டையும் கணக்கில்கொண்டே தமிழில் எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் பொருளிலக்கணமும் செய்யப்பட்டன என்கிறது தொல்காப்பியப் பாயிரம். இன்றைய பேச்சுத் தமிழில் அமைந்துள்ள சில இலக்கணக்கூறுகள் தொல்காப்பியர் காலந்தொட்டே நிலவிவந்திருக்கின்றன. ஆக, இன்றைய பேச்சுத் தமிழுக்கும் இயைபுடையதாக இருக்கிறது தொல்காப்பியம். பேச்சுவழக்கையும் தன் அடிப்படையாக ஆக்கிக்கொண்ட காரணத்தால்தான் தமிழ் இலக்கணம் இன்றுவரை கட்டுடையாமல் தன்னைக் காத்துக்கொண்டிருக்கிறது. சமூகத்தோடு தமிழ் மொழி கொண்டுள்ள உயிர்ப்பாற்றல் மிக்க உறவை எடுத்துக்காட்டும் சான்று இது!

# ஷேக்ஸ்பியருக்கு முன்னரே பிறந்த தமிழ் அச்சு நூல்



ஆங்கில இலக்கியத்தின் பிதாமகராகப் போற்றப்படும் வில்லியம் ஷேக்ஸ்பியர் பிறப்பதற்குப் பத்தாண்டுகளுக்கு முன்னரே முதல் தமிழ் நூல் அச்சிடப்பட்டுவிட்டது. தமிழின் இலக்கிய வரலாறுபோலவே அச்சு வரலாறும் பாரம்பரியமானது. 1554 பிப்ரவரி 11 அன்று போர்த்துக்கீசிய நாட்டின் தலைநகரான லிஸ்பனில் முதல் தமிழ் நூல் வெளியானது. 'தமிழ் மொழியிலும் போர்த்துக்கீசியத்திலும் அமைந்த [திருமறைச்] சிற்றேடு' என்னும் தலைப்பில் அந்த நூல் வெளியானது. தூத்துக்குடியைச் சேர்ந்த வின்சென்ட் தெ நாசரெத், ஹோர்கே கார்வாலோ, தோமா த குருசு எனும் மூவர் அந்நூலை உருவாக்கினர். இந்த நூலில் தமிழ்ச் சொற்கள் லத்தீன் வரி வடிவத்தில் எழுதப்பட்டிருந்தன. முழுவதும் தமிழிலேயே உருவான முதல் நூலான 'தம்பிரான் வணக்கம்' 1578-இல் அச்சிடப்பட்டது. ஐரோப்பிய மொழிகள் தவிர்த்துப் பிற மொழிகளில் அச்சாக்கம் பெற்ற முதல் மொழி என்னும் பெருமை தமிழுக்கு உண்டு!

# தேசியகவியும் புரட்சிக்கவியும்





தமிழ் மரபிலிருந்து முகிழ்த்தெழுந்த மாபெரும் கவிஞர் பாரதியார். விடுதலை தாகத்தின் வெளிப்பாடாக இவருடைய குரல் வெளிப்பட்டதால் தேசியகவியாகவும் மிளிர்ந்தவர். சன்னதம் கொண்ட கவிமொழியால் தமிழர்களைக் கட்டிப்போட்டவர். நவீனத் தமிழ்க் கவிதையின் முன்னோடியும்கூட. கவிதையையே வாழ்க்கையாக, வாழ்க்கையையே கவிதையாகக் கொண்டவர். பாரதி மீது பற்றுள்ள பாரதிதாசனும் தமிழ் மரபின் நீட்சியாவார். ஆனால், இவருடையது ஆதித் தமிழ் மரபு. சங்க இலக்கியத்தில் வெளிப்படும் ஆதி மரபு அது. இவருடைய கவிமொழியில் வெளிப்பட்ட அந்த மரபுச் சிந்தனைதான் தமிழ்நாட்டின் பண்பாட்டுக் கருத்தாக்கங்களின் அடிநாதமாகும். 'தமிழ் எங்கள் உயிருக்கு நேர்' என்றார்!

# தமிழ்நாட்டில் காந்தி





அகிம்சை வழியில் வெள்ளையரை விரட்ட புதிய பாதையைக் காட்டிய அண்ணல் காந்தியடிகள், தமிழ்நாட்டிற்கு 20 முறை வருகைபுரிந்தார். 1921-ஆம் ஆண்டு மதுரைக்கு வந்தபோது, மக்கள் உடுக்கப் போதிய உடை இன்றித் துன்பம் அடைவதைக் கண்டவர், தன்னுடைய வழக்கமான உடை துறந்து எளிமையான உடைக்கு மாறி, மேலாடை அணிவதைத் தன் வாழ்நாள் முழுவதும் தவிர்த்தார். விடுதலை இந்தியாவில், 1959-ஆம் ஆண்டில் மதுரையில் அமைக்கப்பட்ட காந்தி அருங்காட்சியகத்தில், அன்னாரது நினைவைப் போற்றும் வகையில் அவர் பயன்படுத்திய 14 பொருள்கள் (அவர் கொல்லப்பட்டபோது உடுத்தியிருந்த ஆடை உட்பட) காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. மேலும், காந்தி தனக்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பைப் பற்றிப் பலமுறை கூறியிருக்கிறார். தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்த காலத்தில் தமிழ் மொழி கற்கத் தொடங்கியதாகவும், ஜி.யு.போப் எழுதிய 'தமிழ்க் கையேடு' தன்னைக் கவர்ந்த நூல் என்றும் குறிப்பிட்டிருக்கிறார். திருக்குறளும் அவருக்கு மிகவும் பிடித்த நூலாகும். 1937-இல் சென்னையில் நடந்த இலக்கிய மாநாட்டில் காந்தி தலைமை வகித்தார். அதில், உரையாற்றிய தமிழறிஞர் உ.வே.சாமிநாதரின் உரையைக் கேட்ட காந்தி, "இந்தப் பெரியவரின் அடி நிழலிலிருந்து தமிழ் கற்க வேண்டும் என்ற ஆவல் உண்டாகிறது" என்றார்!

# சமத்துவப் பொங்கல்



தமிழர்களின் தனிப்பெரும் திருவிழா தைத்திருநாளாம் பொங்கல். சாதி, மத அடையாளங்களைக் கடந்த பெருவிழா. விவசாயத்தைப் போற்றும் மகத்தான விழா. விவசாயத்திற்கு உதவிய இயற்கைக்கும், சேர்ந்து உழைத்த கால்நடைகளுக்கும் நமது நன்றியைக் கொண்டாடும் பெருவிழா. சங்க இலக்கியங்களில், குறிப்பாக நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு, ஐங்குறுநூறு போன்றவற்றில் குறிப்புகள் உள்ளன. பொங்கலைத் தொட்டுவரும் மற்றொரு திருவிழா சிறுவீட்டுப் பொங்கலாகும். மார்கழியில் எல்லா நாள்களிலும் அதிகாலையில் வாசலில் நீர் தெளித்து, கோலமிட்டு, சாண உருண்டைகளில் பூச்செருகி வைக்கும் விழா இது. இதன் பொருட்டு, சிறுவீடு கட்டிப் பொங்கலிட்டுக் கொண்டாடிய வழக்கமே பின்னாளில் மார்கழி நீராடலானது. காதல் கடவுளை நோக்கிச் செய்யும் மற்றொரு தை நோன்பையும் ஆண்டாள் திருமொழி குறிக்கிறது. ஊர் கூடிக் கொண்டாடும் தமிழர் திருநாள் நம் ஒற்றுமையையும் நல்லிணக்கத்தையும் வெளிக்காட்டும் அழகிய திருவிழாவாகும்!



# விளையாட்டும் பண்பாடும்



விளையாட்டு என்ற தமிழ்ச் சொல்லில் பொழுதுபோக்கு என்ற அம்சம் இல்லை. தமிழர்கள் உருவாக்கிய விளையாட்டுகள் ஒவ்வொன்றும் தமிழ்ச் சமூகக் கருத்தாக்கங்களை வெளிப்படுத்துபவையாகும். 'வல்லாட்டம்' என்பது ஆண், பெண் இருவரும் விளையாடும் பலகை விளையாட்டாகும். சங்க இலக்கியங்களில் இந்த விளையாட்டைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. மேலும், 2800 ஆண்டுகள் பழமையான கீழடி போன்ற அகழாய்வுக் களங்களில் வல்லாட்டாக் காய்கள் கிடைத்துவருவது குறிப்பிடத்தக்கதாகும். பல்லாங்குழி, கோலியாட்டம், பாண்டியாட்டம், ஆடுபுலி ஆட்டம் என ஒவ்வொன்றும் அப்படித்தான். பல்லாங்குழி பொதுவாகப் பெண்களால் ஆடப்படுவது. கல்யாணச் சீர்வரிசையில் இடம்பெறும் வழக்கம் கொண்டிருந்த விளையாட்டு அது. சமூகத்தில் ஒருவருடைய செல்வம் இன்னொருவர் கைக்குச் சென்று சமத்தன்மை குலைக்கப்படுவதை உருவகமாகச் சொல்லும் விளையாட்டே பல்லாங்குழி. 3 புலிகளும், 21 ஆடுகளும் கொண்ட ஆடுபுலி ஆட்டமோ கால்நடை வளர்ப்புச் சமூகத்திலிருந்து பிறந்த ஆட்டமாகக் கணிக்கப்படுகிறது. புலி திரியும் காடுகளில் ஆடுகளைக் காப்பாற்ற முற்பட்டவனின் முயற்சியாகப் பார்க்கப்படுகிறது. ராஜா, ராணி, மந்திரி, குதிரைவீரன், யானைப்படை என அரசு இயந்திர வளர்ச்சியின் வெளிப்பாடாக உருவானது சதுரங்கம். இது தமிழ்நாட்டு மன்னர்கள் ஆடிய விளையாட்டும்கூட. தமிழர்களின் விளையாட்டுகளிலும் தமிழ்ப் பண்பாடு உண்டு!



# விடுதலைக்கான கருவி கல்வி



தமிழர்கள் நாம் தொன்றுதொட்டு கல்வியில் முன்னோடிகள். நவீனக் கல்வியிலும் அப்படியே. அரசியலில் அடிநாதமாக சமூகநீதியை வரித்துக்கொண்டது தமிழ்நாடு. சமூகநீதியை அடையும் கருவியாகக் கல்வியை அது கைக்கொண்டது. 1857–இல் நிர்மாணிக்கப்பட்ட சென்னைப் பல்கலைக்கழகமானது இன்றைய இந்தியாவின் முதன்மைப் பல்கலைக்கழங்களில் ஒன்று. முதல் கவர்னர் ஜெனரல் ராஜாஜி; நோபல் விருதாளர்கள் சி.வி.ராமன், சந்திரசேகர்; கணித மேதை சீனிவாச இராமானுஜம் என்று பல ஆளுமைகள் இதன் மாணவர்கள். ஆய்வு – கண்டுபிடிப்புத் துறையில் நமக்கு இருந்த பலத்தையும், நாம் செல்ல வேண்டிய தொலைவையும் சுட்டுவது சென்னைப் பல்கலைக்கழக வரலாறு. 21 பல்கலைக்கழகங்கள், 600–க்கும் மேற்பட்ட பொறியியல் கல்லூரிகள், 550–க்கும் மேற்பட்ட கலை – அறிவியல் கல்லூரிகள், 400–க்கும் மேற்பட்ட பன்தொழில்நுட்பக் கல்லூரிகளைக் கொண்டது நம் தமிழ்நாடு. நாட்டிலேயே அதிகமான எண்ணிக்கையில் 56 மருத்துவக் கல்லூரிகளைத் தமிழ்நாடு கொண்டிருக்கிறது. கல்வியை எந்த அளவுக்கு முக்கியமானதாகப் போற்றிப் பாதுகாத்து வளர்க்கிறது தமிழ்ச் சமூகம் என்பதற்குச் சான்று இந்த எண்ணிக்கை!

# பெண்மை போற்றுதும்



தமிழையே தாயாக உருவகிக்கும் நம் தமிழ்ச் சமூகத்தில் தடைகளை உடைத்து முன்னகர்வதில் யாருக்கும் சளைத்தவர்கள் அல்ல பெண்கள். சங்க காலம் முதல் இன்று வரை அறிவுசார் செயல்பாடுகளிலும் பொருளீட்டலிலும் வீரத்திலும் கலைகளிலும் பாலின சமத்துவத்தை அடைய முயலும் சமூகமாகவே நம் தமிழ்ச் சமூகம் இருந்துவருகிறது. வீரமும் வெற்றியும் வேண்டி கொற்றவையை வழிபட்ட மரபு நம்முடையது. செவ்வியல் இலக்கியங்களில் பங்களித்த 47 பெண்பாற் புலவர்களின் அறிவுக்கூர்மை போற்றத்தக்கது. நீதியை நிலைநாட்ட அரசனிடம் சாமானியர்களும் வழக்காடலாம் என்பதற்கு முன்மாதிரியானாள் கண்ணகி. அருந்தமிழ்க் கல்வியிலும் ஆடல் முதலான கலைகளிலும் கற்றுத்தேர்ந்த கலைநலஞ்சான்ற ஆளுமை மாதவி. இல்வாழ்க்கை துறந்து, ஏழைகளின் பசிப்பிணி போக்குவதையே தன் வாழ்வறமாகக் கொண்ட அறப்பெருஞ்செல்வி மணிமேகலை. ஆங்கிலேயர்களிடமிருந்து தன் நாட்டை வெற்றிகரமாக மீட்டெடுத்து அரியணை ஏறி ஆண்ட ஒரே வீரமங்கை வேலுநாச்சியார். பெண்ணடிமைத்தனத்தைத் தகர்த்தெறிந்து, பல்வேறு சீர்திருத்தச் சட்டங்கள் நிறைவேறக் காரணமாகத் திகழ்ந்தவர் முத்துலட்சுமி ரெட்டி; இந்தியாவின் முதல் பெண் மருத்துவரும் அவரே. "எனக்கு விடுதலை உணர்வை ஊட்டிய பெருமைக்குரியவர்" என்று காந்தியடிகளால் போற்றப்பட்ட தில்லையாடி வள்ளியம்மை, தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்த இந்தியர்களுக்காகப் போராடி 16 வயதில் உயிர்நீத்தவர். கர்னாடக இசையில் உச்சம் தொட்டு, 'இசைப் பேரரசி' என்று முன்னாள் பிரதமர் நேருவால் புகழப்பட்டவர் எம்.எஸ்.சுப்புலக்ஷ்மி. 'உழுபவர்களுக்கே நிலம்' என்ற பூமிதான இயக்கத்துக்காகத் தன்னை அர்ப்பணித்தவர் கிருஷ்ணம்மாள் ஜெகந்நாதன்.

# நூற்றாண்டு கண்ட கல்விப் புரட்சி



'பசிப்பிணி மருத்துவன் இல்லம் அணித்தோ? சேய்த்தோ? கூறுமின் எமக்கே' என்கிறது புறநானூறு. சங்க காலத்தைச் சேர்ந்த குறுநில மன்னர் ஒருவர் ஏழை எளியோரின் பசியைப் போக்கியதால் பசிப்பிணி போக்கிய மருத்துவராகப் போற்றப்படுகிறார். அந்த மரபின் தொடர்ச்சியாகவே தமிழ்ச் சமூகத்தை வழிநடத்திய தலைவர்கள் பலரும் காலந்தோறும் வறுமையை அகற்றிடவும், மாணவர்களின் கல்வி நலனைப் பாதுகாத்திடவும் முன்னோடித் திட்டங்களை அறிமுகப்படுத்தியுள்ளனர். தொன்றுதொட்டு நிலவும் சமூகச் சிக்கலுடன் வறுமையும் இணைவதால் ஏழை எளிய சமூகக் குழந்தைகளின் காலடிகள் கல்விச்சாலையை எட்ட முடியவில்லை என்பதைக் கருத்திற்கொண்டு, ஒரு நூற்றாண்டுக்கு (1922) முன்பே பள்ளியில் உணவளிக்கும் திட்டத்தை முன்மொழிந்து நிறைவேற்றியது அப்போதைய சென்னை மாநகராட்சி நிர்வாகம். 1957-இல் அப்போதைய முதலமைச்சர் காமராஜரால் தொடக்கக் கல்வி பயிலும் ஏழைக் குழந்தைகளுக்கு மதிய உணவுத் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது. 1982-இல் எம்ஜிஆர் ஆட்சிக் காலத்தில் அது சத்துணவுத் திட்டமாகத் தரம் உயர்த்தப்பட்டது. சத்துணவுத் திட்டத்தை மேலும் சிறப்பாகச் செயல்படுத்திட 1989-இல் முதலமைச்சர் கலைஞர் மு.கருணாநிதி ஆட்சிக் காலத்தில் சத்துணவுடன் முட்டையும் சேர்த்து வழங்கப்பட்டது. பெரும்பாலான குழந்தைகள் காலை உணவு சாப்பிடாமலேயே பள்ளிக்குச் செல்கிறார்கள் என்பதை அறிந்த முதலமைச்சர் மு.க.ஸ்டாலின், காலை உணவுத் திட்டத்தைத் தொடங்கிவைத்து, ஏழை மாணவர்களின் உடல்நலனும் கற்கும் திறனும் மேம்பட வழிவகுத்திருக்கிறார். இப்படியாக, கல்விப் புரட்சியில் தமிழ்நாடு பிற எல்லா மாநிலங்களுக்கும் முன்மாதிரியாகத் திகழ்கிறது!

# நகரமயமும் கிராமமையமும்

இந்தியாவிலேயே அதிகம் தொழில்மயமான மாநிலம் நம்முடைய தமிழ்நாடு. இந்தியாவில் வேறெந்த மாநிலத்தைவிடவும் தமிழ்நாட்டில்தான் தொழிற்சாலைகள் அதிகம். இந்தியாவில் இன்றுள்ள 2.46 லட்சம் தொழிற்சாலைகளில் தமிழ்நாட்டில் மட்டும் 38,837 தொழிற்சாலைகள் உள்ளன. தமிழ்நாட்டைக் குறுக்கும் நெடுக்குமாக இணைக்கும் 1,99,040 கிமீ சாலைகள், 5,952 கிமீ ரயில் பாதைகள் நல்ல தொழில் சூழலுக்கான நுழைவாயிலாக அமைந்துள்ளன. தமிழ்நாடு குறிப்பிட்ட சில துறைகளில் மட்டும் தன்னைக் குறுக்கிக்கொள்ளவில்லை. வாகனங்கள், ஜவுளி, தோல் பொருள்கள், பிளாஸ்டிக், மருந்து எனப் பலதரப்பட்ட துறைகளிலும் உற்பத்தியில் தமிழ்நாடு கவனம் செலுத்துகிறது. தமிழ்நாட்டில் 110 தொழில் பூங்காக்களும் தொழில் பேட்டைகளும், 49 சிறப்புப் பொருளாதார மண்டலங்களும் உள்ளன. தகவல் தொழில்நுட்ப வளர்ச்சியை முன்யோசித்து, நாட்டிலேயே முதலாவதாக இதற்கெனக் கொள்கை வகுத்ததும் 12.80 லட்சம் சதுர அடியில் ஆசிய அளவில் பிரமிக்கத்தக்க 'டைடல் பார்க்' திறந்ததும் தமிழ்நாடு. அதேபோல, அதிகம் நகரமயமான பெரிய மாநிலமும் நம்முடைய தமிழ்நாடு. 48.45% மக்கள் இங்கே நகரங்களில் வாழ்கிறார்கள். அதேசமயம், கிராமங்களை மையப்படுத்திய சிந்தனை எவ்வளவு முக்கியம் என்பதையும் உணர்ந்து செயல்படும் சமூகம் நம்முடையது. வேளாண்மை தந்த வலுவான அடித்தளத்திலேயே நாம் நம்முடைய தொழில் வளர்ச்சியைக் கட்டமைத்துள்ளோம். பெரிய நதி நீர் வளம் இல்லாத நம்முடைய உழவர்கள் உணவுத் தன்னிறைவைத் தக்கவைக்க நிலத்தடி நீரையே பெரிதாக நம்பியிருக்கின்றனர். ஆகையால்தான், விலையில்லா மின்சாரத்தை வழங்கும் முன்னோடி மாநிலமாக நம்முடைய தமிழ்நாடு இருக்கிறது. நகர வளர்ச்சியானது கிராம வளர்ச்சியை முடக்கிவிடக் கூடாது என்பதாலேயே பேருந்துகள் தொடங்கி பள்ளிக்கூடங்கள், சுகாதார நிலையங்கள் வரை அனைத்தும் கடைசி கிராமங்களையும் சென்றடைவதை இலக்காகக் கொண்டு இயங்குகின்றன. இந்தியாவிலேயே மிகச் சிறந்த போக்குவரத்துக் கட்டமைப்பைக் கொண்டிருக்கும் மாநிலங்களில் தமிழ்நாடு முன்வரிசையில் இருக்கிறது. இந்திய அளவில் அதிக எண்ணிக்கையில் (22,000) அரசுப் பேருந்துகளை இயக்கும் மாநிலம் நம்முடையது. லாபக்கணக்கு பார்க்காமல் மலையோரக் கிராமங்களில் மழை நாள் நள்ளிரவில் ஓரிரு பயணிகளுக்காகவும் இயங்கும் அரசுப் பேருந்துகள் நம்முடைய 'நகரமய – கிராமமைய சமநிலைப் பார்வை'க்கான தூதர்கள்!



# பொருளாதாரத்திலும் ஏறுநடை



வரலாற்றுப் பெருமைகள் மட்டுமே ஒரு சமூகத்தின் மதிப்பைத் தீர்மானித்துவிடுவது இல்லை; சமகாலத்தில் அதன் இடத்தைத் தீர்மானிப்பதில் பொருளாதாரம் முக்கியமான பங்கு வகிக்கிறது. இந்தியப் பொருளாதாரத்தின் நான்கு சிங்கங்கள் என்று அழைக்கப்படும் மாநிலங்களில் ஒன்று நம் தமிழ்நாடு. மஹாராஷ்டிரம், குஜராத், கர்நாடகம் ஆகியவற்றோடு நாமும் உயர்ந்து நிற்கிறோம். இந்தியாவின் ஜிஎஸ்டியில் 42% பங்கை இந்த நான்கு மாநிலங்கள் மட்டும் கொண்டிருக்கின்றன. மஹாராஷ்டிரத்துக்கு அடுத்து இந்தியாவின் பெரிய பொருளாதாரம் நம்முடைய தமிழ்நாடு. 2020-21 நிதி ஆண்டில் இந்தியாவின் உள்நாட்டு உற்பத்தி மதிப்பான (ஜிடிபி) 3.18 லட்சம் கோடி டாலரில் தமிழ்நாட்டின் பங்களிப்பு மட்டும் 10%. இந்தியாவிலேயே முதலில் உருவான தொழிற்பேட்டை தலைநகர் சென்னையில்தான் (கிண்டி - 1958) உள்ளது. மாறிவரும் தொழில்நுட்பத்துக்கு ஈடுகொடுக்கும் வகையில் முதலில் உருவான டைடல் பூங்கா, மாநிலத்தின் பிற பகுதிகளில் கிளை பரப்பி தகவல் தொழில்நுட்பத் துறையிலும் முன்னோடி மாநிலமாகத் திகழ்கிறது. இந்தியாவின் டெட்ராய்டு அந்தஸ்தை அளிக்கும் விதமாகத் தமிழ்நாட்டில் ஹூண்டாய், நிசான், ரெனால்ட், பிஎம்டபிள்யூ, அசோக் லேலண்டு, டாஃபே, ராயல் என்பீல்டு, யமஹா, டிவிஎஸ் என விரிவடையும் வாகனத் தொழிற்சாலைகளின் பட்டியல் ஏராளம். தமிழ்நாடு தனக்கான பாதையை உருவாக்கி முதலிடம் நோக்கி நகர்கிறது!

# டிரில்லியன் டாலர் இலக்கு







இந்தியாவில் பிற மாநிலங்களுடன் ஒப்பிடும்போது தமிழ்நாடு பல்வேறு துறைகளில் முன்னிலை வகிக்கிறது. பணவீக்கத்தைக் கட்டுக்குள் வைத்திருக்கும் மாநிலங்களில் தமிழ்நாடும் ஒன்று. தொழிலாளர்களின் தினசரி ஊதியம் இங்கே (ரூ. 445.60) அதிகம். உயர்கல்வியிலும் 98.3% வளர்ச்சியை எட்டியிருக்கிறோம். பிறப்பு விகிதத்தைக் கட்டுக்குள் வைத்திருப்பதிலும் தமிழ்நாடு முன்னோடி மாநிலமாகும். கர்ப்பிணிப் பெண்கள் நலன், குறைவான சிசு மரணம், போதிய எண்ணிக்கையில் மருத்துவர்கள், அரசு மருத்துவமனைகளில் அதிக எண்ணிக்கையிலான படுக்கை வசதிகள் என சுகாதாரக் கட்டமைப்பு வசதிகள் இங்கு சிறப்பாக உள்ளன. மாநிலத்தின் ஒட்டுமொத்த உள்நாட்டு உற்பத்தி, வேளாண் வளர்ச்சி எனப் பல துறைகளிலும் தமிழ்நாடு வெற்றிநடை போடுகிறது. 2030-க்குள் 1 டிரில்லியன் டாலர் பொருளாதார இலக்கை நோக்கி நகர்கிறது தமிழ்நாடு!

# தரணி போற்றும் தமிழர்கள்

தமிழ்நாட்டில் பிறந்து தரணியில் சிறந்த தமிழர் வரிசையில் சர். சி.வி.ராமனுக்குத் தனி இடமுண்டு. ஒளிச் சிதறலைக் கண்டுபிடித்த அந்த இயற்பியல் மேதை 1930இல் நோபல் பரிசு வென்றார். வானியல் இயற்பியலாளரான சுப்பிரமணியன் சந்திரசேகருக்கும் வில்லியம் ஃபௌலருக்கும் விண்மீன்கள் பற்றிய ஆய்வுக்காக 1983இல் இயற்பியலுக்கான நோபல் பரிசு வழங்கப்பட்டது. நோபல் வென்ற இரண்டாவது தமிழர் சந்திரசேகர். தமிழ்நாட்டைப் பிறப்பிடமாகக் கொண்ட இந்திய அமெரிக்கர் வெங்கட்ராமன் ராமகிருஷ்ணன். ரைபோசோம் செல்களுக்குள் புரதங்கள் உற்பத்தியாவது தொடர்பான ஆய்வுக்காக வெங்கட்ராமன் (தாமஸ் ஸ்டைட்ஸ், அடா யோனட்ஸ் இருவருடன் இணைந்து) 2009இல் வேதியியலுக்கான நோபல் பரிசு வென்ற மூன்றாவது தமிழர். இந்திய ஏவுகணை நாயகரும், இந்தியாவின் 11ஆவது குடியரசுத் தலைவருமான அப்துல் கலாமும் இந்த வரிசையில் இடம்பெறத் தக்கவர். வறுமை ஒருபோதும் அறிவுக்குத் தடைக்கல்லாக முடியாது என்பதைத்


சி.வி.ராமன்


சுப்பிரமணியன் சந்திரசேகர்


வெங்கட்ராமன்


அப்துல் கலாம்



ஷிவ் நாடார்



சுந்தர் பிச்சை



நடராஜன் சந்திரசேகரன்



இந்திரா நூயி

தரணிக்கு நிரூபித்த தமிழ்நாட்டுக் கணித மேதை இராமானுஜன். சர்வதேச அளவில் இன்று கவனிக்கப்படும் நிறுவனங்களில் நம்மவர்கள் கோலோச்சும் இடம் தனித்துவமானது. இந்தியாவின் மாபெரும் கொடையாளர் ஒரு தமிழர்: ஷிவ் நாடார். 1976-இல் அவர் தொடங்கிய ஹெச்.சி.எல். நிறுவனத்தில் 2.2 லட்சம் பேர் பணிபுரிகின்றனர். உலகின் மிகப் பெரும் நிறுவனங்களில் ஒன்றான 'கூகுள்' உள்ளிட்ட நிறுவனங்களின் தாயான 'ஆல்பாபெட்' தலைமை நிர்வாகி, ஒரு தமிழர்: சுந்தர் பிச்சை. இந்தியாவின் மாபெரும் தொழில் குழுமமான 'டாடா சன்ஸ்' நிர்வாகத் தலைமையை ஏற்றிருப்பவர் ஒரு தமிழர்: நடராஜன் சந்திரசேகரன். மோகனூர் அரசுப் பள்ளியில் தமிழ்வழியில் பயின்றதைப் பெருமையாகக் கூறுபவர். இந்த வகைமையில் முன்னோடி ஒரு பெண்: இந்திரா நூயி. உலகின் முன்னணி உணவு நிறுவனங்களில் ஒன்றான 'பெப்ஸிகோ' நிறுவனத்தின் தலைமைப் பதவியில் இருந்தவர்.




# முன்னேறு...
# எதுவும் நமக்கான களம்!

தமிழ் வீரர்கள் பல்வேறு விளையாட்டுகளிலும் தம் முத்திரைகளைப் பதிக்கின்றனர். ஒலிம்பிக் ஹாக்கிப் போட்டியில் 1980-இல் தங்கம் வென்ற இந்திய அணியின் கேப்டன் பாஸ்கரன். 'கிரேடு - 1' அந்தஸ்தைப் பெற்ற முதலாவது பயற்சியாளரும் இவரே. செஸ் ஆட்டத்தின் சர்வதேச சாதனையாளரான கிராண்ட் மாஸ்டர் விஸ்வநாதன் ஆனந்த். 2,800 ஈலோ புள்ளிகளைக் கடந்த வெகுசிலரில் ஒருவர். இந்தப் புள்ளிகளை இவர் கடந்தபோது, இவருக்கு முன்னர் மூவரே அந்த இலக்கை எட்டியிருந்தனர். அடுத்து, உலகம் எங்கும் அறியப்படும் தமிழ்முகம் பிரக்ஞானந்தா. தன்னுடைய பத்தாம் வயதிலேயே, வரலாற்றின் மிக இளைய அனைத்துலக செஸ் மாஸ்டர் ஆனவர். நடப்பு உலக சாம்பியனான மாக்னஸ் கார்ல்சனை வென்று உலகையே தன்பக்கம் திருப்பியவர்.




நரேன் கார்த்திகேயன் உலகின் புகழ்பெற்ற ஃபார்முலா ஒன் பந்தயத்தில் இந்தியாவின் சார்பாகப் பங்கேற்ற முதல் வீரர். கார் பந்தயங்களில் அசாதாரண சாதனைகளை நிகழ்த்திய தமிழர். டென்னிஸில் தவிர்க்க முடியாத பெயர் மகேஷ் பூபதி. 1997இல் ரிக்கா ஹிராக்கியுடன் இணைந்து கிராண்ட் ஸ்லாம் போட்டியை வென்ற முதல் இந்தியர். கேரம் விளையாட்டில் இரண்டு முறை உலக சாம்பியன் பட்டம் வென்றவர் மரிய இருதயம். ஒன்பது முறை தேசிய சாம்பியன் பட்டத்தை வென்றவர். இந்திய கிரிக்கெட் அணியின் இந்தத் தலைமுறை முகம் அஸ்வின். 400 டெஸ்ட் விக்கெட்டுகளை அதிவேகமாக எடுத்த இந்தியர். டி20-இல் 50 விக்கெட்டுகளை முதலில் எடுத்த இந்தியரும் இவர்தான். இந்திய கிரிக்கெட் அணியில் தமிழ்நாட்டிலிருந்து சென்னையைச் சேர்ந்தவர்கள் மட்டுமே இடம்பெற்று வந்த நேரத்தில், சேலம் மாவட்டம் சின்னப்பம்பட்டி என்ற குக்கிராமத்தைச் சேர்ந்த நடராஜன் ஆஸ்திரேலிய அணிக்கு எதிராகக் களமிறங்கி இந்திய அணியின் வெற்றிக்கு வித்திட்டார். எது ஒன்றையும் தமக்கான களம் ஆக்குகிற சமூகம் நம்முடையது. நாம் பயணப்பட நிறைய தொலைவுள்ள களங்களில் ஒன்று விளையாட்டுத் துறை. ஆயினும், நமக்கு வசப்படாத துறை என்று ஏதுமில்லை!



# சமூகநலத் திட்டங்கள் முன்னோடி தமிழ்நாடு

பசியோடு கல்வி பயிலக் கூடாது என்ற உயரிய நோக்கில் கொண்டுவரப்பட்ட மதிய உணவுத் திட்டம் பின்னர் சத்துணவுத் திட்டமாக மாறி, இன்று காலை உணவையும் சேர்த்து வழங்கி, கல்விப் புரட்சியில் நூறாண்டு கண்ட மாநிலம் தமிழ்நாடு. 2002-இல் அனைவருக்கும் கட்டாயக் கல்வி என்றார்கள்; அதற்கு 8 ஆண்டுகளுக்கு முன்பே தமிழ்நாடு அந்தச் சட்டத்தைக் கொண்டுவந்துவிட்டது. ஒரு ரூபாய்க்கு ஒரு கிலோ அரிசி வழங்கி இன்று விலையில்லாமல் தந்து, பசியால் ஒருவர் மடியும் நிலை தமிழ்நாட்டில் இல்லை என்ற சூழல் உருவாக்கப்பட்டது. சடங்குகளையும் தாலியையும் மறுக்கும் சுயமரியாதைத் திருமணங்களுக்கும் சட்ட அங்கீகாரம் ஒரு புரட்சிகரமான முன்னகர்வு. கல்வியிலும் வேலைவாய்ப்பிலும் 31% என்றிருந்த இடஒதுக்கீடு, கலைஞர் ஆட்சியில் 49% என உயர்த்தப்பட்டு, இன்று 69% ஆகி இந்தியாவுக்கே முன்னோடியாக நாம் இருக்கிறோம். வாரிசுரிமைச் சட்டத்தில் திருத்தம் கொண்டுவந்து மகள்களுக்கும் சம உரிமை என்றது தமிழ்நாடு; நாம் நிறைவேற்றி 15 ஆண்டுகளுக்குப் பிறகே ஒன்றிய அரசு இந்தச் சட்டத்தை நிறைவேற்றியது.



மற்ற மாநில உள்ளாட்சித் தேர்தல்களில் பெண்களுக்கு மூன்றில் ஒரு பங்கு இடங்கள் எனும் நிலையில், நாம் 2016-இல் 50% இடங்கள் ஒதுக்கப்பட சட்டத் திருத்தம் கொண்டுவந்ததன் மூலம் இதிலும் இந்தியாவுக்கு வழிகாட்டியானோம். பொது மருத்துவத்திலும் தமிழ்நாடே முன்னோடி. தலைமை மருத்துவமனை, மாவட்ட, வட்ட அளவில் மருத்துவமனை, ஆரம்ப சுகாதார நிலையம், துணை சுகாதார மையம் என்று தமிழ்நாட்டின் மருத்துவக் கட்டமைப்பு வலுவானது. அனைத்து சாதியினரும் அர்ச்சகராகலாம், சமத்துவபுரத் திட்டம், நில உச்சவரம்புச் சட்டம், விவசாயிகளுக்கு விலையில்லா மின்சாரம், கை ரிக்சா ஒழிப்புத் திட்டம், பிச்சைக்காரர்கள் மறுவாழ்வுத் திட்டம், மகளிர் சுய உதவிக் குழுக்கள், கைம்பெண் மறுமண உதவித் திட்டம், கலப்புத் திருமண உதவித் திட்டம், உழவர் சந்தைகள் உருவாக்கும் திட்டம், நமக்கு நாமே திட்டம், அனைத்துக் கிராம அண்ணா மறுமலர்ச்சித் திட்டம், திருநர்களுக்கான நலத்திட்ட உதவி, மகளிருக்குக் கட்டணமில்லாப் பேருந்துப் பயணம், புதுமைப் பெண் திட்டம், இல்லம் தேடிக் கல்வி, எண்ணும் எழுத்தும், மக்களைத் தேடி மருத்துவம், நான் முதல்வன் எனத் தமிழ்நாடு கண்ட மக்கள்நலத் திட்டங்கள் பன்மைத்துவம் கொண்டவை. தமிழைத் தன் அரசியல் கருத்தாக்கமாக வரித்துக்கொண்ட, தமிழர் நலன் சார்ந்த சமூகநலத் திட்டங்கள் மற்ற மாநிலங்களுக்கு முன்னுதாரணங்களாகும்!

# வரலாற்றின் முன் நீங்கள்!

நம்முடைய தலைநகரம் சென்னையின் மெரினா கடற்கரையைப் பார்க்கும்போது என்ன நினைவுக்கு வருகிறது? சென்னையின் அடையாளங்களுள் ஒன்று மட்டும் இல்லை மெரினா; சுமார் 13 கி.மீ. நீளம் கொண்ட அது உலகின் மிக நீளமான கடற்கரைகளில் ஒன்றும்கூட. இப்படி 1076 கி.மீ. நீளத்துக்கு நீண்டிருக்கிறது தமிழ்நாட்டின் கடற்கரை. சிலப்பதிகாரம் கொண்டாடும் புகார் நகரக் கடற்கரையோடும், அன்றைய தமிழ்ச் சமூகத்தின் செழுமையோடும் இன்றைய பூம்புகாரை ஒப்பிட்டால், இடைப்பட்ட நூற்றாண்டுகளில் வரலாற்றில் நாம் எங்கோ அழுத்தப்பட்டது புரியவரும். உலகின் முன்னேறிய சமூகங்கள் மத்தியில் நாம் இன்னும் அடைய வேண்டிய உயரமும், அதற்கு நம்முடைய சமூகத்தின் ஒவ்வோர் அங்கத்தினரும் பெற வேண்டிய முன்னேற்றமும் புலப்படும். ஹோமர், வியாசர், தாந்தே, ஷேக்ஸ்பியர் போன்றோர் பெரும் காவியங்களால் வரலாற்றில் இடம்பிடித்தவர்கள். இரண்டே பாடல்களை, சொல்லப்போனால் நான்கே சொற்களில் கணியன் பூங்குன்றனாரைத் தம் வரலாற்றில் இருத்திக்கொண்ட சமூகம் நம்முடையது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்!' என்று உலகளாவிய பார்வையை அவர் வெளிப்படுத்தியதே காரணம். உங்களிடமும் அப்படி அர்த்தம் செறிந்த சிறிய செயல்பாட்டைத்தான் எதிர்பார்க்கிறது நம் சமூகம். மாற்றமாகுங்கள்!

